குருகுலம் வெளியீட்டு எண் : 18

நூலின் பெயர் : மழலை அமுதம்

ஆசிரியர் : திரு. பெ. தூரன்

பொருள் : குழந்தைகளுக்கான பாடல்கள்

வெளியிட்டோர் : கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம்
வெளியீட்டுப்பகுதி

அச்சிட்டோர் : குருகுலம் பிரிண்டர்ஸ், வேதாரண்யம்.

பதிப்பு : முதற்பதிப்பு-1981 டிசம்பர்

பிரதிகள் : 1000

விலை : ரூ. 3-00

Gurukulam Publication No. 18

Title : Mazhalai Amudham

Author : P. Thooran

Subject : Childrens' Nursery Songs

Publishers : Kasthurba Gandhi Kanya Gurukulam
Publication Division

Printers : Gurukulam Printers, Vedaraniam.

Edition : First-1981 Dec.

Copies : 1000

Price : Rs. 3-00

# பதிப்புரை

1935-ம் ஆண்டு நான் கோவை ஸ்ரீ ராமகிருஷ்ண வித்தியாலய மாணவன். தினம் இரவு உணவுக்குப் பின் வரும் நேரத்தை ஆவலுடன் சகமாணவர்களுடன் எதிர்பார்த்திருப்போம்.

பிரஞ்சு நாவலாசிரியர் விக்தர் ஹியூகோவின், லா, மிசாரபில் கதையை சின்னச் சின்ன வாக்கியங்களில் மிக அழகாக எடுத்துக் கூறுவார் எங்கள் தலைமை ஆசிரியர். சிறுவர்களாகிய எங்கள் உள்ளத்தில் அது நன்கு பதிந்து மெய் மறக்கச் செய்யும்.

அவர்தான் திரு. பெரியசாமித் தூரன் அவரைத் தமிழகம் நன்கு அறியும்.

தமிழில் கலைக்களஞ்சியம் உருவாவதற்கு முக்கிய பொறுப்பாளரில் ஒருவர், அதன் தலைமை ஆசிரியர் திரு. தூரன். அவர்களின் மாணவனாகிய எனக்கு மழலையர்களுக்கு அவரது படைப்பாகிய மழலை அமுதத்தை நமது குருகுலத்தின் மூலம் வெளியிடுவதை ஒரு பெரிய வாய்ப்பாகக் கருதுகிறேன்.

மழலைச் செல்வர்கள் பெரும்பயன் அடைவார்கள் என நம்புகிறேன்.

வேதாரண்யம்
18—12—81

வே. அப்பாக்குட்டி,
நிர்வாக அறங்காவலர்.

# கணபதி தோத்திரம்

1. குள்ளக் குள்ளனை
குண்டு வயிறனை
வெள்ளிக் கொம்பனை
விநாயகனைத் தொழு.

2. குள்ளக் குள்ளக் கணபதியாம்
குண்டு வயிற்றுக் கணபதியாம்
வெள்ளிக் கொம்புக் கணபதியாம்
விநாயகர் பாதம் போற்றிடுவோம்.

3. குள்ளக் குள்ளனை
குண்டு வயிறனை
அஞ்சு கரத்தனை
ஆனை முகத்தனை
நெஞ்சில் நினைக்க
நலமுண்டாகுமே.

# நிலா

குழந்தை — நிலக் கடல் ஓரத்திலே
நிமிர்ந்து பார்ப்பது யாரோ?

நிலா — பட்டு நிலா நான்தான்
பார்க்க வந்தேனே
கட்டித் தயிரைக் கடலில் ஊற்றிக்
காண வந்தேனே
கொட்டிக் கடலில் மல்லிகைப் பூவை
விட்டுப் பார்க்க வந்தேன்
வெள்ளிப் பனியைக் கடலில் தூவி
வேடிக்கை பார்க்க வந்தேன்
துள்ளித் திரியும் குழந்தை நீயும்
தூங்கச் சென்றிடுவாய்

# கும்மாயம் (பாயசம்)

கும்மா கும்மா கும்மாயம்
கொஞ்சிக் கொடுப்பாள் கும்மாயம்
அம்மா தெய்வம் கும்பிடு
அப்பா தெய்வம் கும்பிடு
அவரே தெய்வம் கும்பிடு
அன்பாய் என்றும் நடந்திடு
கும்மா கும்மா கும்மாயம்
கொஞ்சிக் கொடுப்பாள் கும்மாயம்

---

குறிப்பு: கும்மாயம் என்பதற்கு பாயாசம் என்பது பொருள்.

# வெற்றி வடிவேலன்

வெற்றி வடி வேலன்
வீரர் தொழும் சீலன்
பற்றி இரு தாளைப்
பக்தி செயும் வேளை
அற்று விடும் துன்பம்
சுற்றி யெழும் இன்பம்
பற்று விடுத் தெல்லாம்
பார்த்துரை செய் சொல்லாம்.




என்ன அதிசயம் என்ன அதிசயம்
இவனைப் பாரடா
என்னைப் போலவே இருந்திடுவான்
இவனும் யாரடா
காலையிலே நீண்டிருப்பான்
பனைமரம் போலே
கடும் பகலில் குள்ளனாய் விடுவான்
என்ன அதிசயமே
குதித்தால் குதிப்பான்
கூடவே வருவான்
என்ன அதிசயமே
இருட்டைக் கண்டதும்
எங்கோ மறைவான்
என்ன அதிசயமே
மறுநாள் காலை மீண்டும் வருவான்
என்ன அதிசயமே
என்றன் நிழலை எட்டி உதைத்தாலும்
எங்கோ போக மாட்டான்
என்றும் நண்பனாக இருந்திடுவான்
என்றன் நிழல்தானே

# எங்கள் காந்தித் தாத்தா

1. எங்கள் காந்தித் தாத்தா
எல்லோருக்கும் நல்லவர்
பொங்கும் சிரிப்புத் தாத்தா
பொய் சொல்லவே மாட்டார்.

2. தங்கம் போல நல்லவர்
சத்தியம் கடவுள் என்பவர்
எங்கள் காந்தி தர்த்தா
இந்தியாவின் தந்தையாம்.

3. எங்கள் நாட்டின் விடுதலை
எமக்கு வாங்கித் தந்தவர்
அன்பு வழியில் சென்றவர்
அஹிம்சை போற்றி நின்றவர்.

4. இந்திய நாட்டின் தந்தையாய்
என்றும் போற்றும் காந்தியாம்
எங்கள் காந்தி தாத்தா
எல்லோருக்கும் நல்லவர்.



1. கண்ணன் எங்கள் கண்ணனும்
கடல் நீல வண்ணனும்
வெண்ணெய் உண்ணும் கண்ணனும்
வேணு கானக் கண்ணனும்

2. கன்றை மேய்த்து வந்தவன்
காளிய நடனம் புரிந்தவன்
குன்றை ஏந்திக் காத்தவன்
கோகுல மைந்தன் கண்ணனும்.

3. அன்பர் யார்க்கும் நல்லவன்
அருள் சுரந்தே காப்பவன்
துன்பம் போக்க வல்லவன்
தொழுது போற்றி வணங்குவோம்.

# கட்டுமரம்

கட்டுமரம் ஏலேலோ
போகுது பார் ஐலசா
பட்டுப் பூச்சி ஏலேலோ
பறக்குது பார் ஐலசா
மலையைப் போல ஏலேலோ
அலை வந்தாலும் ஐலசா
மதியாமல் ஏலேலோ
நீஞ்சுது பார் ஐலசா
தொலைவினிலே ஏலேலோ
செல்லுது பார் ஐலசா
வெள்ளைக் குதிரை ஏலேலோ
துள்ளிக் குதிக்கும் ஐலசா
கொள்ளை மீன்கள் ஏலேலோ
கூடை வரும் ஐலசா

# மலை மேலே மஞ்சு

மலை மேலே மஞ்சு
மல்லிகைப் பூப் பஞ்சு
மாலை வெய்யில் கொஞ்சும்
வந்து விளையாடும்
தங்கத் தீவைப் போலே
பொங்கும் தீயைப் பாராய்
ஐந்து குழந்தை பாவம்
ஆண்டி ஆகிப் போனாள்
கஞ்சிக் கென்ன செய்வாள்
பஞ்சம் பஞ்சம் பாவம்
கொட்டிக் கொடம்மா கொட்டிக் கொடு
கொட்டிக் கொடம்மா கொட்டிக் கொடு

# நாட்டுப் பணி

நாட்டுப் பணியே நல்லதோர் பணியாம்
வீட்டுக் கொருவராய் விட்டால் போதும்
மேன்மைகள் எல்லாம் பெற்றிடலாகும்
சாதிப் பிரிவுகள் பலபல சொல்லி
சண்டைகள் செய்வார் சில முடர்
ஆதியில் எங்கே சாதியிருந்தது?
அறியாமையினுல் இங்கே வளர்ந்தது
போதும் போதும் சாதிப் பிரிவினுல்
வேதனை துன்பம் அடிமையும் தாழ்ச்சியும்
விளைந்தது போதும் போதும் போதும்
சாதியும் ஒன்றே சமயமும் ஒன்றே
நீதியும் ஒன்றே நேர்மையே வழியாம்
அத்தன் காந்தி அருள்வதைக் கேட்பீர்
அன்பும் அஹிம்சையும் அவை இருகண்கள்
இன்பமாய் உலகினில் இருந்திடலாகும்
போரும் பகைமையும் போயொழிந்திடுக
தேசத் தந்தை காந்தி மகாத்மா
தினமும் அருளிய நல்லுரை கொள்வோம்
அனைவரும் ஒன்ருய் அன்பினில் ஓங்குவோம்
வாழிய வாழிய வாழ்க மஹாத்மா
வாழிய அறங்கள் வாழிய வாய்மை
வாழிய வாழிய வாழ்க பல்லாண்டே.

# புதுநாள்

புத்தம் புதுநாள் பிறந்தது பார்
புதிய நற்பணிகள் செய்திடுவாய்
இத்தனை நாள் வீணாய்க் கழித்தது போல்
இதனையும் வீணாய்க் கழிப்பாயோ?
சத்தமிலாமல் ஒருநாள் தோன்றும்
சத்தமிலாமல் அது மறைந்திடுமே
எத்தனை வருந்தி அழைத்தாலும்
இதுநாள் மீண்டும் வருமோ சொல்?



# சிட்டுக்குருவி

குழந்தை: "சிட்டுக் குருவி சிட்டுக் குருவீ
சேதி சொல்லுவாய்
எட்டுத் திசையிலும் என்னென்ன சேதி
எனக்குச் சொல்லுவாய்"

குருவி : "பட்டுக் குழந்தை பட்டுக் குழந்தை
பாட்டுப் பாடுவோம்
கெட்ட கவலைகள் கிட்ட வராது
பாட்டுப் பாடுவோம்"

குழந்தை: "பாட்டு வேண்டாம் கதையைச் சொல்லு
கேட்டுப் பார்க்கலாம்"

குருவி : "அங்கொரு வீட்டில் கூடு கட்டினேன்
அதனைச் சொல்லுவேன்
தங்கமாய்ப் போற்றி என்னைக் காத்தனர்
தாயன்புடன் வளர்த்தார்
கூடு கட்டியே முட்டையும் வைத்தேன்
குஞ்சுகள் தோன்றின
தேடி உணவை ஓடிக் கொணர்ந்தேன்
திக்கெட்டும் போய்ப் பறந்தேன்

இறக்கை முளைத்து வளர வளர
இன்ப முற்றேனே
பறப்பதற்கே குஞ்சுகள் ரண்டும்
பர பரத்தன
இன்னும் சிலநாள் பொறுங்கள் பொறுங்கள்
இன்பமாய்ப் பறக்கலாம்
என்ன சொல்லியும் கேட்கவில்லை
என்ன நான் செய்வேனே!
இரையைத் தேடிப் போயிருக்கையில்
இருப்புக் கொள்ளவில்லை
இரண்டு குஞ்சும் எட்டியே பார்த்து
பறக்க முயன்றன
என்ன செய்வேன் என்ன சொல்வேன்
சொன்னதைக் கேளாமல்
கூட்டுக் கடியில் தொப்பென்று வீழ்ந்து
துடியாய்த் துடித்தன
வீட்டுப் பூனை காத்திருந்தது
வீணாய் ஆசையெலாம்
வெறுங் கனவாய் போயிற்றென்றே
கண்ணீர் விட்டதுவே.''

# அணிற்பிள்ளை

கொறித்துக் கொறித்துத் தின்னுமாம்
குதித்துக் குதித்து ஆடுமாம்
பறித்துப் பறித்துப் பழங்களை
பாங்காய் உண்ணும் அழகைப் பார்!
இரண்டு கைகளால் எடுத்துமே
இங்கும் அங்கும் பார்க்குமாம்
பருந்து வந்தால் பாய்ந்தோடும்
பக்க மரங்களில் பதுங்கிடும்
வாயிலின் முன்னல் ஓடிடும்
வாலைத் தூக்கியே ஆடிடும்
ஆயிரம் அழகு அணிலைப் பார்!
அன்பாய் என்னுளம் கவர்ந்திடும்
முன்னாள் சேதுவை மேடு செய்ய
முயன்றான் இராகவன் அந்நாளில்
கல்லும் மலைகளும் கொணர்ந்தங்கே
கட்டும் முயற்சியில் பங்கு பெற
கடமை அணிலும் தான் புரிய
கல்லும் மணலையும் போட்டதுவாம்
கண்டான் இராமன் மகிழ்ந்தெடுத்து
கையால் அன்புடன் தடவினனே
கைவிரல் பட்ட இடத்தினிலே
...பிகள் தங்கமாய்த் தோன்றினவே.

# சின்ன பெரிய மோட்டாரும்

தாய் : பெரிய மோட்டார் சந்தைக்குப் போகுது
பெரிய மோட்டார் வேணுமா?
சின்ன மோட்டார் சந்தைக்குப் போகுது
சின்ன மோட்டார் வேணுமா?

குழந்தை : பெரிய மோட்டார் வேண்டாம்
பெரிய சத்தமும் போடும்
சின்ன மோட்டார் வேணும்
சிட்டாய்ப் பறக்க வேணும்

தாய் : பெரிய மோட்டார் சந்தைக்குப் போகுது
அரிசி வாங்கி வர
சின்ன மோட்டார் சந்தைக்குப் போகுது
தின் பண்டம் வாங்கி வர

குழந்தை : [அவசரமாக]
பெரிய மோட்டார் வேண்டாம்
அரிசி வாங்கி வரும்
சின்ன மோட்டார் வேணும்
தின்பண்டம் வாங்கி வரும்